
ம்.. ம்.. ம்... நட.....
இந்த முயல் எப்படிப் புலியின் மேல் அமர்ந்து வருகிறது.


எல்லா விலங்குகளும் பயப்படுகின்றனவே...! முயல் கொடிய விலங்காகத்தான் இருக்குமோ!
முயல் அரசே நான் உங்களைத் தவறாகப் பேசியிருந்தால் மன்னித்து விட்டு விடுங்கள்.


இப்பொழுது இந்தக் காட்டுக்கு அரசன் யார்?
நீங்கள் தாம்


சத்தமாகச் சொல்
தாங்கள் தாம் இந்தக் காட்டுக்கு அரசன்


உன்னை மன்னித்து விடுகிறேன். நீ இந்தக் காட்டிலேயே இருக்கக்கூடாது. எங்காவது ஓடிப்போய்விடு!
ஐயோ! என்னை விட்டுவிடுங்கள் நான் போய் விடுகிறேன்..!


இப்போதெல்லாம் முயல் வயிறு நிரம்பச் சாப்பிட்டு, நிம்மதியாக, சுகமாகப் பகல் வேளைகளில் ஒரு குட்டித் தூக்கம் போட்டுக் கொண்டிருக்கிறது.



## வாங்க பேசலாம்

- இக்கதையை உனது சொந்த நடையில் கூறுக
- காட்டின் அரசனாக நீ எந்த விலங்கை அமர்த்துவாய்? காரணம் என்ன?
- புலி எதையும் ஆராயாமல் முயலின் பேச்சை உண்மை என ஏற்றுக்கொண்டது சரியானதா? கலந்துரையாடுக.



சிந்திக்கலாமா?

தவறு செய்பவர்களை என்ன செய்யலாம்?
திருத்தலாமா ?
அப்படியே விட்டுவிடலாமா ?

# படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

## சரியான சொல்லைத் தெரிவு செய்து எழுதுவோமா?

01 பல்லாண்டு இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..............................

அ) பல் + லாண்டு ஆ) பல் + ஆண்டு
இ) பல + ஆண்டு ஈ) பல + யாண்டு

02 செயலாக்கம் இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..............................

அ) செய + லாக்கம் ஆ) செயல் + ஆக்கம்
இ) செயலா + ஆக்கம் ஈ) செயல் + லாக்கம்

03 இப்போது+ எல்லாம் என்பதைச் சேர்த்து எழுதக் கிடைக்கும் சொல் ..............................

அ) இப்போதெல்லாம் ஆ) இப்போது எல்லாம்
இ) இப்போல்லாம் ஈ) இப்போ யெல்லாம்

04 பேசி + இருந்தால் என்பதைச் சேர்த்து எழுதக் கிடைக்கும் சொல் ..........................................

அ) பேசியிருந்தால் ஆ) பேசியிரு

இ) பேசிஇருந்தால் ஈ) பேசவிருந்தால்

05 வந்து + இருந்தது என்பதைச் சேர்த்து எழுதக் கிடைக்கும் சொல் ..........................................

அ) வந்துஇருந்தது ஆ) வந்திஇருந்தது

இ) வந்திருந்தது ஈ) வந்தியிருந்தது

## வினாக்களுக்கு விடையளி

01 முயலின் கவலைக்குக் காரணம் என்ன?

02 விலங்குகளின் கூட்டத்தில் என்ன தீர்மானம் எடுக்கப்பட்டதாக முயல் கூறியது?

03 முயல், தான் அரசன் என்பதை நிரூபிக்க புலியை என்ன செய்யக் கூறியது?

04 புலியை மன்னித்து விட்டுவிட முயல் கூறிய நிபந்தனை என்ன?

05 விலங்குகள் உண்மையில் எதைக் கண்டு அஞ்சின?

## எதிர்ச்சொல்லால் சொற்றொடரை நிறைவுசெய்க

01 பருவ மழை பெய்தால் மக்கள் மகிழ்ச்சி அடைவர், பெய்யாவிட்டால் .............................................. அடைவர்.

02 எப்பொழுதும் உண்மை பேச வேண்டும், .............................................. பேசுவதைத் தவிர்க்க வேண்டும்.

03 தோல்வி என்பது முடிவு அல்ல வெற்றியின் ..............................................

04 கணினி மூலம் கல்வி கற்பது புதிய முறை. கரும்பலகை மூலம் கல்வி கற்றது .............................................. முறை

05 பிறருக்குக் கொடுத்து உதவுவது உயர்ந்த குணம். பிறர் பொருளைத் திருடுவது .............................................. குணம்

06 மருத்துவமனைகளில் சத்தமாகப் பேசாமல் .............................................. பேச வேண்டும்




## சரி ☑, தவறு ☒ எனச் சரியான குறியிடுக

01 புலி, முயலின் மூதாதையரைக் கொன்று தின்றுவிட்டது.

02 முயல் புலிக்குக் கரும்பு கொடுத்தது.

03 விலங்குகளின் கூட்டம் நடந்த போது புலி தூங்கிக் கொண்டிருந்தது.

04 முயல் புலியிடம் காட்டிலுள்ள விலங்குகள் எல்லாம் தன்னைக் கண்டு அஞ்சுவதாகக் கூறியது.

05 முயல் புலியைக் காட்டிலிருந்து ஆட்சி செய்ய வேண்டும் எனக் கூறியது.

**சக்கரம் காட்டும் ஈரெழுத்துச் சொற்கள் என்ன என்பதை கீழ்க்காணும் குறிப்புகளைக் கொண்டு கண்டுபிடிக்க.**

01 உலகம் என்பதன் வேறு சொல் ...............................

02 திருவிழா என்றாலே இது இருக்கும் ...............................

03 மக்கள் சேர்ந்து வாழுமிடம் ...............................

04 இது இல்லாமல் உயிர்கள் இல்லை ...............................

05 நீர் விட்டுத் தயிரைக் கடைந்தால் ...............................

06 மரம், செடி கொடி மண்ணில் ஊன்றி நிற்க உதவும் ...............................

07 மன்னர்கள் தம் நாட்டின் எல்லையை விரிவுபடுத்த அண்டை நாடுகளோடு செய்வது ...............................

08 பூத்தொடுக்க உதவுவது ...............................




**எது முன்னே? எது பின்னே? அகர வரிசைப்படுத்துக.**



**பௌத்தம், பெட்டி, போர்வை, படை, பூமி, பிண்ணாக்கு பீர்க்கு, புத்தகம், பைந்தமிழ், பொத்தான்.**

## மொழியோடு விளையாடு

**காலியிடங்களைக் கூடையில் உள்ள சொற்களைக் கொண்டு நிரப்புக**

பல்லினை
மெல்லத்
தொடு

பல்லி ______ ______ ______ சொல் ______

நாவினை
உள்ளே
தள்ளு

______ தோள் ______ ______ ______ வெள்ளி

நாவினைச்
சுழற்றி
முழக்கு

______ ______ தமிழ் புகழ் ______ ______

நெல் வாள் வாழ்
பால் வள்ளி மல்லி அகல்
அகழ் பள்ளி மகிழ்ச்சி
நாள் யாழ்



### செயல் திட்டம்

நூலகத்திற்குச் சென்று சிறுவர் இதழ்களில் உள்ள படக்கதைகளைப் படித்து மூன்று கதைகளை உனது குறிப்பேட்டில் எழுதிவந்து வகுப்பறையில் கூறுக.

# 7 சான்றோர் மொழி – வெற்றி வேற்கை




## உதவியால் பெறும் நன்மை

தெள்ளிய ஆலின் சிறுபழத்து ஒரு விதை
தெண்ணீர்க் கயத்துச் சிறுமீன் சினையினும்
நுண்ணிதே ஆயினும் அண்ணல் யானை
அணிதேர்ப் புரவி, ஆள்பெரும் படையொடு
மன்னர்க்கு இருக்க நிழலாகும்மே

– அதிவீரராமபாண்டியர்

## பொருள் அறிவோம்

பழைமையான ஆலமரத்திலுள்ள சிறு பழத்தின் ஒரு விதையானது, தெளிந்த நீருள்ள குளத்தின் சிறிய மீனின் முட்டையைவிடச் சிறியதாகும். அந்தச் சிறிய விதை, பெரிய ஆலமரமாக வளர்ந்து நிற்கும்பொழுது, அம்மரத்தின் நிழலில் யானைப்படை, தேர்ப்படை, குதிரைப் படை, காலாட்படை ஆகியவற்றோடு மன்னனும் மற்றவர்களும் தங்க முடியும். அதுபோல, நீங்கள் செய்யும் உதவி சிறியதாக இருப்பினும், அது மற்றவர்களுக்கு மிகப்பெரிய பயனைத் தரும் .



## வாங்க பேசலாம்



- பாடலின் பொருளை உமது சொந்த நடையில் கூறுக
- உனக்கு உனது நண்பன் செய்த சிறிய உதவி, அந்த நேரத்தில் பெரியதாக இருந்த அனுபவத்தைப் பற்றிப் பேசு.



## சிந்திக்கலாமா!

சிறு சிறு உதவிகளைப் பிறருக்குச் செய்வது பற்றி உனது கருத்து என்ன? வகுப்பில் கலந்துரையாடுக.

# படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

## சரியான சொல்லைத் தெரிவு செய்து எழுதுவோமா?

01 **தெள்ளிய** இச்சொல்லின் பொருள் ..............................

அ) மெல்லிய ஆ) இளகிய

இ) முதிர்ந்த ஈ) அழகிய

02 **ஆல்** இச்சொல்லின் பொருள் ..............................

அ) வேலமரம் ஆ) ஆலமரம்

இ) அரசமரம் ஈ) வேப்பமரம்

03 **கயம்** இச்சொல்லின் பொருள் ..............................

அ) நீர்நிலை ஆ) பயம்

இ) வானிலை ஈ) பருவநிலை

04 புரவி இச்சொல்லின் பொருள் ..........................

அ) யானை ஆ) பூனை

இ) ஆள் ஈ) குதிரை

05 பெரும்படை இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..........................

அ) பெருமை + படை ஆ) பெரும் + படை

இ) பெரு + படை ஈ) பெரிய + படை

06 நிழல் + ஆகும் என்பதைச் சேர்த்து எழுதக் கிடைக்கும் சொல் ..........................

அ) நிழல்ஆகும் ஆ) நிழலாகும்

இ) நிழல்லாகும் ஈ) நிழலாஆகும்

## வினாக்களுக்கு விடையளி

01 ஆலமரத்தின் விதை எவ்வாறு இருக்கும் என்று அதிவீரராமபாண்டியர் குறிப்பிடுகிறார்?

02 ஆலமரத்தின் நிழலில் தங்கும் படைகள் யாவை?

03 இப்பாடலின் பொருள் எதனுடன் ஒப்பிட்டுக் கூறப்படுகிறது?

## பொருத்தமான நிறுத்தக்குறி இடுக.

01 ஆகா என்ன சுகம் தெரியுமா

02 என்னைக் கட்டிப் போடுகிறார்கள்

03 ஆகா இது என்ன பிரமாதம்

04 நான் என்ன வேலை செய்ய வேண்டும்

05 காய்கறிக்கடையில் வேண்டிய தக்காளி கத்தரி புடலை ஆகியவற்றை வாங்கி வந்தேன்

## மொழியோடு விளையாடு

**சொல் ஒன்று, பொருள் இரண்டு – கண்டுபிடி**

| | | |
|---|---|---|
| | எ.கா வயலில் மேய்வது | ஆடு |
| | அழகாய் நடனம் | ஆடு |
| 01 | மாதத்தின் மறுபெயர் | ________ |
| | நிலவைக் குறிப்பது | ________ |
| 02 | வகுப்பில் பாடம் | ________ |
| | மாடி செல்ல உதவும் | ________ |
| 03 | வளைந்து ஓடுவது | ________ |
| | 6 – இந்த எண்ணின் பெயர் | ________ |
| 04 | பூக்களைத் தொடுத்தால் | ________ |
| | அந்தி சாயும் பொழுது | ________ |
| 05 | சோற்றின் மறுபெயர் | ________ |
| | அழகிய பறவை | ________ |

## கலையும், கைவண்ணமும்

பென்சில் சீவிய துகள்களைக் கொண்டு படங்களை உருவாக்குவோம்.

**எ.கா:**





## இணைந்து செய்வோமா


கூடையில் இருக்கும் சொற்களுள் முதல் எழுத்து ஒன்று போல் வரும் சொற்களை எடுத்து முதல் பழத்தில் எழுதுக. இரண்டாம் எழுத்து ஒன்று போல் வரும் சொற்களை எடுத்து இரண்டாம் பழத்தில் எழுதுக.
பூனை
தம்பி
சிறு பழம்
தண்ணீர்
தட்டு
யானை
சிலை
கிண்ணம்
சிறுமீன்
பானை
தலை
வண்ணம்
தவளை
வனை
சிலந்தி
சிந்தனை
நுண்ணியதே
அண்ணம்
சிறுபழம்
சிறுமீன்
கிண்ணம்
வண்ணம்



## அறிந்து கொள்வோம்



மீன்களில் 22, 000 வகையான மீன்கள் உள்ளன. இவற்றுள் மிகச் சிறியது கோபி வகையைச் சார்ந்தது. இதன் நீளம் 13 மில்லி மீட்டர், மிகப் பெரிய மீன் திமிங்கலச் சுறா. இதன் நீளம் 18 மீட்டர்.







## செயல் திட்டம்

செய்தித்தாளில் பிறருக்கு உதவியதாக வரும் செய்திகளைச் சேகரித்து செய்தித் தொகுப்பு ஒன்று தயார் செய்க மற்றும் கீழே உள்ள செய்தித் துணுக்கு கட்டத்தில் ஒட்டுக

செய்தித் துணுக்கு

## இணைப்புச் சொற்களை அறிவோமா?

இரண்டு தொடர்களை இணைக்கப் பயன்படும் சொற்கள் இணைப்புச் சொற்கள் ஆகும்.

சில இணைப்புச் சொற்களையும், அவற்றைப் பயன்படுத்தும் முறைகளையும் அறிவோம்.

அதனால், ஆகவே, ஆனால், எனினும், ஆகையால், எனவே போன்றவை.

01 பருவ மழை பெய்தது அதனால் ஏரி, குளங்கள் நிரம்பின.

02 காற்று பலமாக வீசியது ஆகவே மரங்கள் வேரோடு சாய்ந்தன.

03 அப்பா விரைவாக வந்துவிடுகிறேன் என்றார் ஆனால் வரவில்லை.

04 பூக்கள் அழகாகப் பூத்திருந்தன எனினும் பறிக்க மனமில்லை.

05 நான் தாய் நாட்டிலேயே பணிபுரிய விரும்புகிறேன் ஆகையால் வெளிநாடு செல்லமாட்டேன்.

06 தினமும் காலையில் எழுந்து நன்றாகப் படித்தேன் எனவே நான் தேர்வில் நல்ல மதிப்பெண் பெற்றேன்.

## பயிற்சி

ஆகவே, எனவே, ஆகையால், ஆனால் ஆகிய இணைப்புச் சொற்களைப் பயன்படுத்திச் சொற்றொடர்களை உருவாக்குக.

 ___________ ____________ ____________ ____________

 ___________ ____________ ____________ ____________

 ___________ ____________ ____________ ____________

 ___________ ____________ ____________ ____________

# ௪ விடியும் வேளை

மன்னவனூர் ஓர் அழகான மலைக்கிராமம், இனிய காலை வேளை, மழைபெய்து ஓய்ந்திருந்தது, சாலையில் அங்கும் இங்குமாகத் தண்ணீர் நின்றிருந்தது. மரங்கள் நனைந்து கிளைகளிலும் இலைகளிலும் நீர்த்திவலைகள் தெரிந்தன. பஞ்சுப்பொதிகள் போன்ற மேகக்கூட்டங்கள் வளைந்து நெளிந்து செல்லும் பாதையை மறைத்து மிதந்தபடிச் சென்றன. பச்சைப்பசேல் என்ற வயல்வெளிகளில், சிலுசிலுப்பான காற்று கூடவே எழுந்தது.

பனைஓலை வேய்ந்த குடிசையில், நெற்றியில் வட்டநிலா போலச் சிவப்பாக குங்குமப் பொட்டு வைத்த அம்மா அறிவுமதி, விறகு அடுப்பில் சமைத்துக் கொண்டு இருந்தாள். கருத்த மண்சட்டியில் வெள்ளை வெளேரென வரகரிசிச்சோறு கொதித்துக் கொண்டிருந்தது. கொடியடுப்பில் மஞ்சளாகப் பருப்பு மணம்மிக்க பூண்டுடன் வெந்து கொண்டிருந்தது.

வதக்கிய பசுமையான பிரண்டைத் துவையலை அம்மியில் அரைத்துக் கொண்டே, அடுப்பையும் கவனித்துக் கொண்டிருந்தாள் அறிவுமதி.

மரங்களும் செடிகளும் சூழ்ந்த இடத்தில் பசுங்கன்றென ஓடியாடி விளையாடிக் கொண்டு இருந்தனர் பிள்ளைகள் இனியனும், இனியாவும்.



அன்புமேலிட தமது பிள்ளைகளை அழைத்தாள் அம்மா. பள்ளிக்குச் செல்ல தங்களை ஆயத்தப்படுத்திக் கொண்டனர் பிள்ளைகள்.

பசுஞ்சாணம் மெழுகிய தரையில் மனைப்பலகையில் அமர்ந்து துளிரான தலைவாழை இலையை விரித்து நீர் தெளித்து, அதில் சுடச்சுட வரகரிசிச் சோறிட்டு, ஆவிபறக்கும் பருப்புக் கடையலை ஊற்றினாள் அம்மா. துணையாகத் தொட்டுச்சுவைக்கச் சுள்ளென்ற பிரண்டைத் துவையலும் வைத்தாள்.

நாக்கு சப்புக்கொட்ட பிள்ளைகள் விரும்பி உண்டனர், பின்னர் தாயிடம் விடைபெற்றுப் பள்ளிக்குத் துள்ளிக்குதித்து ஓடினர்.

வாய்க்காலும் வரப்பும் நிறைந்த வயலில் வேலை செய்து கொண்டிருந்த கணவனுக்கு உணவளிக்க, கலயத்தில் சோறுடன் அம்பென விரைந்தாள் அறிவுமதி, இனிமையான காலைப்பொழுது இப்படியாகக் கழிந்தது.

எளிய வருணனைச் சொற்களைப் பயன்படுத்திச் சிறுசிறு உரைப்பகுதிகளைப் படித்தல், தமக்கான நடையில் எழுதுதல்

## வாங்க பேசலாம்



- மன்னவனூர் கிராம வருணனையை உன் சொந்த நடையில் கூறுக .
- உமது ஊரின் மாலை நேரக் காட்சிகளை வருணித்துக் கூறுக.
- பாடப்பகுதியை வாய்விட்டுச் சரியான உச்சரிப்புடன் படித்துக் காட்டுக.



சிந்திக்கலாமா?

படத்திலுள்ள எந்தக் கிராமத்தில் நீ வாழ விரும்புகிறாய் ஏன்? உனது ஊரைச் சுத்தமாக்க என்ன செய்யலாம்? திட்டமிடுக.

1



2



## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

### சரியான பலூன்களை எடுத்துப் பொருத்துக.

01 வேளை

02 பொதி

03 ஆயத்தப்படுத்துதல்

04 துளிர்

05 கொடியடுப்பு

தாமதப் படுத்துதல் | முதிர்ந்த இலை | இளம் இலை | வேலை | பக்க அடுப்பு | நேரம் | மெதுவாக | தயார் செய்தல் | மூட்டை



## சரியான சொல்லைத் தெரிவு செய்து எழுதுவோமா?

01 சாலையெங்கும் இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ........................................

அ) சாலை + யெங்கும் ஆ) சாலை + எங்கும்

இ) சால + எங்கும் ஈ) சால + யெங்கும்

02 சுண்டியிழுக்கும் இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ........................................

அ) சுண்டி + யிழுக்கும் ஆ) சுண் + டியிழுக்கும்

இ) சுண்டு + இழுக்கும் ஈ) சுண்டி + இழுக்கும்

03 ஓடி + ஆடி என்பதைச் சேர்த்து எழுதக் கிடைக்கும் சொல் ........................................

அ) ஓடிஆடி ஆ) ஓடியோடி

இ) ஓடியாடி ஈ) ஒடியாடி

04 காலை + பொழுது என்பதைச் சேர்த்து எழுதக் கிடைக்கும் சொல் ........................................

அ) காலைபொழுது ஆ) கால்பொழுது

இ) காலைப்பொழுது ஈ) காலப்பொழுது

05 வரகு + அரிசி என்பதைச் சேர்த்து எழுதக் கிடைக்கும் சொல் ........................................

அ) வரகரிசி ஆ) வரகுஅரிசி

இ) வரக்கரிசி ஈ) வரகுகரிசி

06 உணவு + அளிக்க என்பதைச் சேர்த்து எழுதக் கிடைக்கும் சொல் ........................................

அ) உணவுஅளிக்க ஆ) உணவளிக்க

இ) உணவுவளிக்க ஈ) உணவ்வளிக்க

## வினாக்களுக்கு விடையளி

01 அழகிய மலைக்கிராமத்தின் பெயர் என்ன?

02 கிராமத்தில் உனக்குப் பிடித்த இயற்கைக் காட்சிகளை எழுதுக.

03 பிள்ளைகள் காலை உணவாக என்ன சாப்பிட்டார்கள்?

## பாடப்பகுதியில் இடம்பெற்றுள்ள வருணனைச் சொற்களை எடுத்து எழுதுக

எ.கா: பச்சைப்பசேல் என்ற வயல்வெளி ........................................

# மொழியோடு விளையாடு

## புதிய சொற்களை உருவாக்கலாமா?






1. நகம்
2. 
3. 
4. 
5. 
6. 
7. 
8. 

## வண்ணமிட்டு மகிழ்வோமா!...



## பத்தியைப் படித்து வினாக்களுக்கு விடையளிக்க.

சிறு தானிய உணவுகளே நம் ஆரோக்கியத்திற்கு ஏற்றது. குதிரை வாலி அரிசி, தினை, வரகரிசி, கேழ்வரகு, கம்பு, சோளம், பனிவரகு அரிசி, மாப்பிள்ளை சம்பா அரிசி, போன்றவை சிறு தானியங்கள் ஆகும். இந்தச் சிறு தானியங்களைக் கொண்டு பல உணவு வகைகளை மண் பானைகளில் தயாரித்துப் பயன்படுத்துவது மிகவும் நல்லது. நாம் உண்ட உணவு முழுமையாகச் செரித்தபிறகுதான் அடுத்த வேளை உணவை உண்ண வேண்டும். இதைத் தான் நம் முன்னோர்" பசித்துப் புசி" என்றனர். இவற்றைத் தவிர்த்துவிட்டுத் துரித உணவுகளைச் சாப்பிடத் தொடங்கியதே பல்வேறு நோய்கள் ஏற்படக் காரணமாகிறது.

சிறு தானிய உணவுகளை உண்போம்!

ஆரோக்கியமான வாழ்வைப் பெறுவோம்!




01 எவ்வகை உணவு முறை நமக்கு ஏற்புடையது?

02 சிறு தானியங்களுள் ஏதேனும் நான்கினை எழுதுக.

03 துரித உணவு வகைகளை உண்ணக் கூடாது, ஏன்?

## கலையும் கைவண்ணமும்

### தேவையான பொருட்கள்:

வெள்ளை வரைபட அட்டை, சிறிதளவு மணல், பசை, பென்சில், வண்ணப் பொடி.

### செய்யும் முறை

வெள்ளை வரைபட அட்டையில் உனக்குப் பிடித்த படத்தினை வரைந்து கொள். வரைந்த பகுதிக்குள் மட்டும் பசையினைத் தடவு. தடவிய பசை காய்வதற்கு முன் மணலைத் தூவு. நன்றாகக் காய்ந்த பின் அட்டையைக் கவிழ்த்துவிட்டு, பிறகு திருப்பினால் அழகிய மணல் ஓவியம் கிடைக்கும். தேவையான இடத்தில் வண்ணப் பொடிகளைத் தூவி மேலும் அழகுப்படுத்து. இதனை வாழ்த்து அட்டையாகவும் பயன்படுத்தலாம்.



### அறிந்து கொள்வோம்

- இரண்டு சொற்கள் ஒரே கருத்தினை வலுப்படுத்துவது நேரிணை.
  எ.கா: சீரும் சிறப்புமாக, ஓங்கி உயர்ந்த.
- இரண்டு எதிர்ச்சொற்கள் ஒரே கருத்தினை வலுப்படுத்துவது எதிரிணை.
  எ.கா: இரவு பகல், மேடு பள்ளம்



### செயல் திட்டம்

- சிறுதானியங்கள், நவதானியங்கள் ஆகியவற்றைச் சேகரித்து, ஒட்டி அதன் பெயரை எழுதிப் படத்தொகுப்பு தயார் செய்க.

# 9 கரிகாலன் கட்டிய கல்லணை

மணிமொழியும், கனிமொழியும் தங்களது முதல் பருவ விடுப்பில் திருச்சியில் உள்ள தம் மாமா வீட்டிற்குச் சென்றனர். கல்லணையைப் பார்க்க வேண்டும் என்ற விருப்பத்தினை மாமாவிடம் கூறினர். மாமாவும் அதற்கு இசைந்து தமது குடும்ப உறுப்பினர்களையும் அழைத்துக் கொண்டு கல்லணைக்குச் செல்கிறார்.

**மணிமொழி** : எனக்கு இந்தப் பயணம் மகிழ்ச்சியைத் தருகிறது மாமா.

**கனிமொழி** : எனக்கும் தான். ஏனென்றால் நம்மோடு அத்தையும் கபிலனும் வருவது மிகவும் மகிழ்ச்சியாக உள்ளது.

**அத்தை** : நாம் பார்க்கப் போகும் கல்லணையை நெருங்கிவிட்டோம்.

**மாமா** : வாருங்கள் கல்லணையைச் சுற்றிப் பார்ப்போம்.

**கனிமொழி** : மாமா, கல்லணை எந்த மாவட்டத்தில் உள்ளது?

**மாமா** : தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ளது. திருச்சியிலிருந்து 20 கிமீ தொலைவில் உள்ளது. இந்தக் கல்லணையைக் கரிகாலன் என்ற மன்னன் கட்டினான்.

**மணிமொழி** : கல்லணையைக் கட்டிய கரிகாலன் பற்றித் தெரிந்து கொள்ள ஆர்வமாக உள்ளது மாமா, உங்களுக்குத் தெரிந்த செய்திகளைக் கூறுங்கள்.

**அத்தை** : எனக்குத் தெரியும் நான் கூறுகிறேன் கேளுங்கள். சோழ அரசர்களில் மிக முக்கியமான சிறப்புமிக்க அரசன் கரிகாலன் ஆவார். இவரது இயற்பெயர் வளவன் என்பதாகும்.

**கனிமொழி** : இவரது பெயர் வளவன் என்று சொல்கிறீர்கள். அப்படியானால் கரிகாலன் என்ற பெயர் எப்படி வந்தது?

**மாமா** : கரிகாலன் என்பதற்குக் கருகிய காலை உடையவன் என்பது பொருள். இளம் வயதில் இவருக்கு ஏற்பட்ட தீ விபத்தின் காரணமாக இப்பெயர் இவருக்கு வழங்கலாயிற்று.

**மணிமொழி** : ஐ! கல்லணை எவ்வளவு நீளமாகவும், பார்ப்பதற்கு எவ்வளவு அழகாகவும் இருக்கிறது. இந்தக் கல்லணையைக் கட்ட கரிகாலன் எடுத்துக் கொண்ட முயற்சியைக் கூறுங்கள் மாமா.



**மாமா** : சரி கூறுகிறேன். எனது ஆசிரியர் எனக்குச் சொன்ன செய்திகளை நான் உங்களுக்குக் கூறுகிறேன். தற்போது பயன்பாட்டில் உள்ள மிகப் பழைமையான ஒரே அணை கல்லணை. இதுவே உலகின் மிகப் பழைமையான நீர்ப்பாசனத்திட்டம் எனவும் கூறப்படுகிறது. மணலில் அடித்தளம் அமைத்துக் கட்டியுள்ளார்கள். இது பழந்தமிழரின் தொழில்நுட்பத்திற்குச் சான்றாகும். இது இன்று வரை வியத்தகு சாதனையாக உள்ளது.



**மணிமொழி** : ஓ! அப்படியா மாமா..........

**மாமா** : ஆtம், காவிரியில் அடிக்கடி பெருவெள்ளம் வரும், ஆனால் அந்த நீர் எதற்கும் பயன்படாமல் கடலுக்குச் சென்றுவிடும். மக்கள் மழைக்காலத்தில் வெள்ளப் பெருக்காலும், கோடைக்காலத்தில் நீர் இன்றியும் மக்கள் துயரப்பட்டதைக் கண்டு அதனைத் தடுக்கும் பொருட்டு பெரியதோர் அணையைக் கட்ட முடிவெடுத்தான் கரிகாலன்.

**மணிமொழி** : அப்போதே இரும்புக் கம்பிகள், சிமெண்ட் இருந்ததா? மாமா.

**மாமா** : இல்லையம்மா, இது கட்டப்பட்ட முறையைச் சொல்கிறேன் கேள். காவிரி ஆற்றின்மீது பெரிய பாறைகளைக் கொண்டு வந்து போட்டனர். அந்தப் பாறைகளும் நீர் அரிப்பின் காரணமாகக் கொஞ்சம் கொஞ்சமாக மண்ணுக்குள் சென்றன. அந்தப் பாறையின் மேல் வேறொரு பாறையை வைத்து நடுவே தண்ணீரில் கரையாத ஒரு வித ஒட்டும் களிமண்ணைப் பூசி, இரண்டும் ஒன்றோடு ஒன்று ஒட்டிக்கொள்ளும்படி செய்தனர். இது பல நூற்றாண்டுகள் கடந்து இன்றும் உறுதியோடு நிற்கிறது. கல்லணை தமிழர்களின் கட்டுமானத் திறனைப் பறை சாற்றுவதாக அமைந்துள்ளது.

**கபிலன்** : இதோ இங்கே பாருங்கள். ஒரு கல்வெட்டு உள்ளது. இதில் என்ன எழுதியிருக்கிறது என்று படிப்போம் வாருங்கள்.

**மாமா** : இவ்வணை இரண்டாம் நூற்றாண்டில் கட்டப்பட்டது. காவிரி ஆறானது காவிரி, கொள்ளிடம், வெண்ணாறு, புதுஆறு, என நான்காகப் பிரிகிறது. காவிரி இவ்வாறு பிரியும் இடத்தில்தான் கல்லணை கட்டப்பட்டுள்ளது. இதனால்தான் திருச்சி, தஞ்சாவூர், மாவட்டங்கள் வளமாகின்றன. இது விவசாயப் பாசனத்திற்கான மிகப்பெரிய திட்டமாகும்.

**அத்தை** : மதிய உணவு கொண்டு வந்துள்ளேன், மரநிழலில் அமர்ந்து அனைவரும் உணவு உண்போம் வாருங்கள்!

**கனிமொழி** : கல்லணை, பார்ப்பதற்குக் கண்ணையும் கருத்தையும் கவரும் வகையில் அமைந்துள்ளது. எனவே கரிகாலனுக்கு நன்றி கூறுவோம்.

**மணிமொழி** : கல்லணை உள்ளவரை கரிகாலனின் புகழ் நிலைத்துநிற்கும்.



## வாங்க பேசலாம்

- கல்லணை பற்றி உனக்குத் தெரிந்த செய்திகளை உன் சொந்த நடையில் கூறு.
- உமது ஊரில் உள்ள மிகப் பழைமையான இடம் எது? அதுபற்றி வகுப்பறையில் கலந்துரையாடுக.



## சிந்திக்கலாமா?

கோடைக்காலங்களில் நீர்ப்பற்றாக்குறை ஏற்படக் காரணம் என்ன?

நீர்ப்பற்றாக்குறையைப் போக்க என்ன செய்வாய்?

பிறர் கூறுவதைக் கவனமுடன் கேட்டல் / வினாக்கள் எழுப்புதல், அவற்றின் மீதான தங்கள் கருத்துகளை / எதிர் வினைகளை வெளிப்படுத்துதல்.

## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!



### சரியான பழத்தைத் தேர்ந்தெடுக்க

01 துயரம் இச்சொல் குறிக்கும் பொருள் ..........................................

02 வியத்தகு இச்சொல் குறிக்கும் பொருள் ..........................................

03 முறியடித்து இச்சொல் குறிக்கும் பொருள் ..........................................

04 சூழ்ச்சி இச்சொல் குறிக்கும் பொருள் ..........................................



## சரியான சொல்லைத் தெரிவு செய்து எழுதுவோமா?

01 பெருவெள்ளம் இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..............................

அ) பெருமை + வெள்ளம் ஆ) பெரு + வெள்ளம்

இ) பெரு + வுள்ளம் ஈ) பெரிய + வெள்ளம்

02 தங்கியிருந்த இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..............................

அ) தங்கி + இருந்த ஆ) தங்கி + யிருந்த

இ) தங்கியி + ருந்த ஈ) தங்கு + இருந்த

03 அமைந்துள்ளது இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..............................

அ) அமைந் + துள்ளது ஆ) அமைந்து + உள்ளது

இ) அமைந்து + ள்ளது ஈ) அமைந் + உள்ளது

04 அரசு + ஆட்சி என்பதைச் சேர்த்து கிடைக்கும் சொல் ..............................

அ) அரசஆட்சி ஆ) அரசாட்சி

இ) அரசுசாட்சி ஈ) அரசுஆட்சி

05 நீர் + பாசனம் என்பதைச் சேர்த்து எழுதக் கிடைக்கும் சொல் ..............................

அ) நீர்பாசனம் ஆ) நீர்ப்பாசனம்

இ) நீரப்பசனம் ஈ) நீரபாசனம்

## பந்தை அதன் எதிர்ச்சொல் கூடையில் போடலாமா?






















## சரியானதை எடுத்து எழுதுக

01 கல்லணை அமைந்துள்ள மாவட்டம் ................................ (திருச்சி/ தஞ்சாவூர் )

02 தமிழ்நாட்டில் காவிரியின் முக்கிய துணையாறு ................................ (வைகை / கொள்ளிடம்)

03 கல்லணையைக் கட்டிய அரசன் ................................ (கரிகாலன் / இராசராசன்)

04 கல்லணை ................................ தொழில்நுட்பத்திற்குச் சிறந்த சான்றாகத் திகழ்கிறது (பழந்தமிழர் / இன்றைய)

## வினாவிற்கு ஏற்ற விடையளிக்க.

01 கரிகாலனின் இயற்பெயர் என்ன?

02 கரிகாலன் என்று பெயர் வரக் காரணம் என்ன?

03 கரிகாலன் கல்லணையைக் கட்ட காரணம் யாது ?

04 கல்லணையின் சிறப்பாக நீ நினைப்பதை எழுதுக.

# மொழியோடு விளையாடு

## ஓர் எழுத்தைக் கண்டுபிடி, நான்கு சொல்லைப் பெறலாம்














## அறிந்து கொள்வோம்



**தமிழ்நாட்டிலுள்ள முக்கிய அணைகள்**

- கல்லணை
- மேட்டூர் அணை
- வைகை அணை
- சாத்தனூர் அணை
- பவானி சாகர் அணை





## செயல் திட்டம்

நூலகத்திற்குச் சென்று வரலாற்று நூல்களைப் படித்து யாரேனும் ஐந்து அரசர்களின் பெயர்களையும், அவர்கள் செய்த நற்செயல்களையும் தெரிந்து கொண்டு அட்டவணையை நிரப்பி வருக

| வ. எண் | பெயர் | சிறப்பு |
|---|---|---|
| 1 | | |
| 2 | | |
| 3 | | |
| 4 | | |
| 5 | | |

# அகர முதலி

| | | | |
|---|---|---|---|
| 1. | அண்டை நாடு | – | பக்கத்து நாடு |
| 2. | அண்ணல் | – | கருணை உடையவர் |
| 3. | ஆசி | – | வாழ்த்து |
| 4. | ஆட்டாந்தொழு | – | ஆடு கட்டும் இடம் |
| 5. | ஆல் | – | ஆலமரம் |
| 6. | ஆவி | – | உயிர் |
| 7. | ஆயத்தப்படுத்துதல் | – | தயார் செய்தல் |
| 8. | இலகுவான | – | எளிமையான |
| 9. | எண்ணும் | – | நினைக்கும் |
| 10. | என்னில் | – | எனக்குள் |
| 11. | ஓலைக்கொட்டான் | – | ஓலையால் செய்யப்பட்ட சிறு கூடை |
| 12. | கனிந்து | – | பழுத்து |
| 13. | முறியடித்து | – | தகர்த்து |
| 14. | கொடியடுப்பு | – | பக்க அடுப்பு |
| 15. | சூழ்ச்சி | – | தந்திரம் |
| 16. | சேதாரம் | – | வீணாதல் |
| 17. | துயரம் | – | துன்பம் |
| 18. | துளிர் | – | இளம் இலை |
| 19. | தையலர் | – | பெண்கள் |
| 20. | தொலைவு | – | தூரம் |
| 21. | மன்னர் | – | அரசர் |
| 22. | மாட்டாந்தொழு | – | மாடுகட்டும் இடம் |
| 23. | முளைப்பாரி | – | நவதானியங்கள் முளைத்துச் சிறிது வளர்ந்து நிறைந்துள்ள மண்பாண்டம் |
| 24. | பொதி | – | மூட்டை |
| 25. | வல்லமை | – | வலிமை |
| 26. | வியப்பு | – | ஆச்சரியம் |
| 27. | விரைவில் | – | வேகமாக |
| 28. | வெட்டவெளி | – | திறந்த வெளி |
| 29. | வேளை | – | நேரம் |

| திறன் பகுதி | | திறன் | பாட எண் |
|---|---|---|---|
| கேட்டல் | 1. | ஓசைநயமிக்க பாடல்களைக் கேட்டுப் புரிந்து கொள்ளல் | 1 |
| | 2. | நாட்டுப்புறக் கதைகளைக் கேட்டுப் புரிந்து கொள்ளல் | 3 |
| | 3. | சூழ்நிலையில் உற்றுக்கேட்ட விவரங்களைப் புரிந்து கொள்ளல் | 9, 7, 4 |
| பேசுதல் | 1. | தங்குதடையின்றிப் பேசுதல் | 2 |
| | 2. | வருணனை கலந்து பேசுதல் | 8 |
| படித்தல் | 1. | கதைகளை நிறுத்தக்குறிகளுக்கு ஏற்பப் படித்தல் | 3, 6 |
| எழுதுதல் | 1. | சொல்லக் கேட்டுப் பிழையின்றி எழுதுதல் | அனைத்தும் |
| | 2. | பத்தியைப் படித்து வினாக்களுக்கு விடை கூறுதல் | 5 |
| | 3. | புதிர்களை எழுதுதல் | 6, 7 |
| படைப்பாற்றல் | 1. | படம் பார்த்து வருணித்து எழுதுதல் | 8 |
| | 2. | படத்தொகுப்பு உருவாக்குதல் | 8 |
| நடைமுறை இலக்கணம் | 1. | இணைப்புச் சொற்கள் அறிதல் | 7 |
| | 2. | ஐம்பால் | 2 |
| தானே கற்றல் | 1. | சிறுசிறு கதைகளைப் படித்தல் | 3 |
| | 2. | அகரமுதலியைப் பயன்படுத்திப் பொருளறிதல் | அனைத்தும் |
| சொல்லாட்சித் திறன் | 1. | சொற்களஞ்சியம் பெருக்குதல் | அனைத்தும் |

## தமிழ் – நான்காம் வகுப்பு
## தமிழ் ஆக்கம்

**கல்வி ஆலோசகர்**

**முனைவர். பொன். குமார்**
இணை இயக்குநர் (பாடத்திட்டம்)
மாநிலக் கல்வியியல் ஆராய்ச்சி மற்றும் பயிற்சி நிறுவனம், சென்னை

**மேலாய்வாளர்கள்**

**ஆ.சே.பத்மாவதி**,எழுத்தாளர்,
சென்னை.

**முனைவர். அ. மணமலர்ச்செல்வி,**
முதுநிலை விரிவுரையாளர்,
மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம்,
கீழப்பழுவூர், அரியலூர் மாவட்டம்.

**ந. இராமலிங்கம்,** உதவிப் பேராசிரியர்,
மாநிலக் கல்வியியல் ஆராய்ச்சி மற்றும் பயிற்சி நிறுவனம், சென்னை

**பா. மலர்விழி,** விரிவுரையாளர்,
மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம்,
திருவூர், திருவள்ளூர்.

**சி. பன்னீர்செல்வம்,** கல்வி மாவட்ட ஒருங்கிணைப்பாளர்,
ஒருங்கிணைந்த கல்வி, புதுக்கோட்டை.

**இல. சீனிவாசன்,** முதுகலை ஆசிரியர்,
மஜ்ஹருல் உலூம் மேனிலைப்பள்ளி,
ஆம்பூர், வேலூர் மாவட்டம்.

**ஒருங்கிணைப்பாளர்கள்**

**முனைவர். கா.சா. மொழியரசி,** முதல்வர்,
மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம்,
கீழப்பழுவூர், அரியலூர்.

**தே.விமலா தேவி,** விரிவுரையாளர்,
மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம்,
சென்னை

**கலை மற்றும் வடிவமைப்புக்குழு**

**பக்க வடிவமைப்பு**

**உதய் இன்போடெக்**
குரோம்பேட்டை, சென்னை

சந்தோஷ்குமார் சக்திவேல்
திருவாரூர்.

**வரைபடம்**

**ரா.ஷாலினி**
**வை.மை.பிராங்க் டஃப்**
**பா. ரவிகுமார், ஈரோடு.**
**செ. ரமேஷ்,**

**பாடநூல் உருவாக்கக் குழு**

**முனைவர். பு. வழியரசன்,**
ஊ. ஒ. தொ. பள்ளி,
இடைச்செருவாய், கடலூர் மாவட்டம்.

**அ. மேரிவேளாங்கண்ணி,** தலைமை ஆசிரியை,
ஊ. ஒ. தொ. பள்ளி, திம்மனந்தல்,
விழுப்புரம் மாவட்டம்.

**பெ. முருகராணி,** இடைநிலை ஆசிரியை,
ஊ. ஒ. தொ. பள்ளி, இடைச்செருவாய்,
கடலூர் மாவட்டம்.

**அனுசுயா தேவி,** இடைநிலை ஆசிரியை,
ஊ. ஒ. தொ. பள்ளி, சாலையம்பாளையம்,
விழுப்புரம் மாவட்டம்.

**சு. அமுதா,**
ஊ. ஒ. தொ. பள்ளி, கீழையூர்,
திருமானூர், அரியலூர் மாவட்டம்.

**க. மல்லிகா,** தலைமை ஆசிரியை,
ஊ. ஒ. தொ. பள்ளி, அயன்புத்தூர்,
திருவெறும்பூர், திருச்சி மாவட்டம்

**செ. சாந்தி ஜூலி,** தலைமை ஆசிரியை,
ஊ. ஒ. ந. நி. பள்ளி.விளாகம், திருமானூர்
அரியலூர் மாவட்டம்.

**சீ. மைதிலி,** பட்டதாரி ஆசிரியை,
அ.ஆ.மே.நி.பள்ளி. குன்னம், பெரம்பலூர்.

**இரா. சித்ரா,** இடைநிலை ஆசிரியை,
ஊ.ஒ.ந.நி.பள்ளி, அஸ்தினாபுரம், அரியலூர்

**த. சம்பத்குமார்,** இடைநிலை ஆசிரியர்,
ஊ. ஒ. தொ. பள்ளி, அகரம்(கா), பரங்கிப்பேட்டை

**விரைவுக்குறியீடு மேலாண்மைக்குழு**

**சூ.ஆல்பர்ட் வளவன் பாபு** ,பட்டதாரிஆசிரியர்
அரசினர் உயர் நிலைப்பள்ளி, பெருமாள் கோவில்,
பரமக்குடி, இராமநாதபுரம்

**ம.முருகேசன்,** பட்டதாரி ஆசிரியர் ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி, பெத்த வேளாண் கோட்டகம்,
முத்துப்பேட்டை, திருவாரூர்.

**வ.பத்மாவதி,** பட்டதாரி ஆசிரியர்,
அரசினர் உயர் நிலைப்பள்ளி, வெற்றியூர்,
திருமானூர், அரியலூர்.

**தரக்கட்டுப்பாடு**

**ராஜேஷ் தங்கப்பன்**
**காமாட்சிபாலன் ஆறுமுகம்**
**பிரசாந்த் பெருமாள்சாமி**

**வடிவமைப்பு ஒருங்கிணைப்பாளர்**

**ரமேஷ் முனிசாமி**

# Preface

The English Language textbook has been designed to enable a fun-filled and engaging experience in learning the language. The approach allows for plenty of practice in the four language skills. It focuses on structure practice and vocabulary enrichment through a variety of language learning activities. These activities evoke interest and engaged practice in the language and thus lead to retention.

As per NCF 2005, language is learnt when it is taught with exposure in meaningful context rather than as a subject. In accordance with this, the textbook has been drafted with themes related or familiar to children. The units provide space for effective individual and pair work and thus allows the teacher to focus on time management in multi-level classrooms.

## How to use the textbook?




- The first term English Book for Standard IV has three units.
- Each unit is planned for a month.
- Nila introduces the theme of each unit.
- Each unit is designed with the things in and around the home like the robots, hobbies and adventures.
- My little pictionary provides the exposure to a pictorial dictionary in an attractive way.







- Let us learn is the teacher led prose and helps children learn vocabulary and values with the help of the context set in each of the story.
- Let us build provides scope for learning vocabulary with associated grammar concepts. The section is followed by exercises to help children practise.
- Let us know provides scope for teaching grammar in a context. The section helps children to learn grammar concepts inductively.

- Let us listen develops the listening skill of children by following instructions and acting accordingly.
- Let us speak provides opportunity for the teachers to teach the language structures through games and activities. It develops listening and speaking skills.
- Let us sing provides opportunity for the children to sing rhymes with actions and intonation. It helps children learn new vocabulary contextually.









- Brainy box kindles the children's divergent and convergent thinking ability
- Let us read is a supplementary lesson that helps children learn vocabulary and values with the help of stories.
- Let us read aloud develops reading habit in children by familiarising them with short, interesting stories.
- Let us write builds writing skill in children.



## Unit I—A World with Robots

- Children are inquisitive and love learning of things that are innovative like robots.
- In the story, "The Trick Robot" we read about the life of Vicky who wants a robot to help with his work.
- In the poem, "My Robot" we learn about the characteristics of a robot and how it helps its master.
- In the story, "Robot Expo" we read about Anitha's experience at a 'Robot Expo'.







## Unit II—My Hobbies

- Children learn new skills every day and have many likes that can be developed into hobbies.
- In the story, "Do it yourself" we read about Vinoth and his friends and learn of their hobbies.
- In the poem, "Treasure Trove" we learn about how reading as a hobby can help children explore a whole new world.
- In the story, "Anbu and the Fish" we read about Anbu and Madhan and their experience with fishing as a hobby.

## Unit III—Time for a Journey

- Children love to travel and visit new places.
- In the story, "Robinson Crusoe" we read an abridged version of the classic "Robinson Crusoe".
- In the poem, "A Voyage" we are taken on a voyage with animals.
- In the story, "Bujju's Brave Adventure" we read about Bujju and his family visiting a nearby hill and how the visit becomes an adventure.







## Learning outcomes

- It is a moment of pride for children as they colour the balloons.
- This self-assessment tool helps boost their self -confidence.
- It is also a diagnostic page for the teacher to ensure that each student has attained the expected learning outcome in each unit.

## Let's use the QR code in the text books!

- Download DIKSHA app from the Google Play Store.
- Tap the QR code icon to scan QR codes in the textbook.
- Point the device and focus on the QR code.
- On successful scan, content linked to the QR code gets listed.



# CONTENTS





e-Book



Assessment



Digilinks



# 1 A World with Robots





# MY LITTLE PICTIONARY



**lazy** (*adj*): not ready to do any work.



**Sack** (*n*): a large bag used for storing and carrying goods.



**Rack** (*n*): a stand to keep things.



**Humanoid** (*n*): something that looks like a human.



**Expo** (*n*): a large international exhibition.



# LET US LEARN

## The Trick Robot




Vicky was a lazy boy. He never did his homework on time. He never kept his things back in the right place. He **pleaded** to his father to buy him a robot to do his work. Vicky's father wanted him to become an active boy. So, he bought him a trick robot. Vicky did not know that it was a trick robot. He was glad to have a robot to do all his work.







What? You are a robot. You cannot **refuse** me. Clean my room now!
Do you want me to strain my back? I cannot do that.


Really? I cannot believe this! At least, charge my phone.
Why don't you do that yourself? I must make some calls.


Aah! I have a headache now. Get me a cup of hot tea.
My battery is draining by listening to you. First, you charge my battery.


I am tired of you! Play me a **pleasant** song. I want to relax.
That's a great idea! Why don't you play me one?
THINK
Do you think it is a good robot?


Oh no! Dad! Please sell this robot. It is totally useless.
Yes. This time please sell me to an active master. I don't want to work for lazy people.


Really? Is that why you did not help me?


No more robots for me ! I will do all the work myself.

## Glossary

| | |
|---|---|
| plead | request |
| refuse | disagree or reject |
| pleasant | happy |

# LET US UNDERSTAND

## A. Choose the correct option.

1. Vicky wanted a ____________ to do all his work.
   a. toy   b. friend   c. robot
2. Vicky's father bought a ____________ robot.
   a. lazy   b. trick   c. active
3. Vicky decided to ____________ the robot at the end.
   a. keep   b. sell   c. praise
4. Robot asked Vicky to sell him to an ____________ master.
   a. lazy   b. active   c. passive

## B. Read the statement and write **True** or **False**.

1. Vicky pleaded his father to buy a robot.
2. Vicky was an active boy always.
3. The robot did not obey his master.
4. Vicky's father decided to change his son's character.

## C. Answer the questions.

1. What kind of a boy was Vicky?

_______________________________________________

2. Who asked the Robot to attend the phone call?

_______________________________________________

3. Whom did Vicky want to do all his work?

______________________________

4. How did Vicky change at the end?

______________________________

5. What did you learn from this lesson?

______________________________

## D. Match the dialogue to the character.

"I will do all the work myself."



"First, you charge my battery."



"I have bought you a robot."



## E. Name the character or speaker.

1. "The robot will do all your work." [ ]
2. "Why don't you do that yourself?" [ ]
3. "You want me to strain my back?" [ ]
4. "Play me a pleasant song." [ ]



# LET US BUILD







| One (Singular) | More than one (Plural) |
| --- | --- |
| Bat | Bats |

**Some tips to change singular to plural**

❖ Simply add **s**.







❖ Add **es** for the naming words ending with **ch**, **sh**, **s**, **ss** and **x**.















❖ Simply add **s**, if any one of **a, e, i, o, u** comes before **y**.







❖ Change the **y** into **ies**, if any one of **a, e, i, o, u** does not come before **y**.







**Tick (✓) the correct plural form.**

| | | |
|---|---|---|
| Fly: ❒ Fly ❒ Flies ❒ Flys | Bench: ❒ Benches ❒ Benchs ❒ Bench | Dog: ❒ Dogs ❒ Dog ❒ Doges |
| Bush: ❒ Bush ❒ Bushes ❒ Bushs | Boy: ❒ Boy ❒ Boies ❒ Boys | Fox: ❒ Foxes ❒ Fox ❒ Foxs |

**Write the plural form.**

1. Cat ____________
2. Watch ____________
3. Dish ____________
4. Cherry ____________

## LET US SING




### My Robot

I have a robot big and strong, big and strong, big and strong,
watch now how it walks along,
with a nice rhyming song.

I have a robot smart and tall, smart and tall, smart and tall,
watch now how it welcomes all,
with a nice greeting call.

It has wheels go front and back, front and back, front and back,
watch now how it keeps the sack,
in every little rack.

Never it takes food and rest, food and rest, food and rest,
watch now how it works its best,
with all same zest.

**Note to the teacher:** Sing the song with actions. Encourage children to listen and sing along with actions. Follow the tune "The wheels on the bus go".

## Glossary

| | |
|---|---|
| strong | powerful |
| watch | look at or observe attentively |
| smart | fashionable |
| rack | shelf or Stand |
| zest | great interest |

## A. Match the rhyming words.

tall - best

song - all

rack - along

rest - sack

## B. Fill in the blanks.

1. I have a robot big and ________.
2. I have a robot ________ and tall.
3. It keeps the sack in every little ________.
4. It never takes ________ and ________.

## C. Answer the questions.

1. What does it sing? ________________
2. How do the wheels go? ________________
3. Does it work its best? ________________
4. How does it welcome all? ________________



## LET US KNOW



girl

Here the naming word girl can be used for any girl. So, it is a common noun.







Here are some naming words that denote the person and things in common.

boy pen city fruit book king animal bird game



Nethra

Here the naming word Nethra is used for a particular girl. So it is a proper noun.




Here are some naming words that denote the person and things in particular.

Siva Madurai Chennai Mala Tamil Paari English

**Circle the pictures that denotes person or things in common.**

| | | | |
|---|---|---|---|
|  Girl |  Pooja |  Book |  English book |
|  Tree |  Mango Tree |  Boy |  Arun |

**Circle the pictures that denotes person or things in particular.**


Raju


Mango


Doctor


Book


Animal


Soldier

Colour the **common noun green** and **proper noun blue**.

| | | | | |
|---|---|---|---|---|
| Gracy | Fruit | Earth | Onion | Peacock |
| Train | Ball | Vellore | Planet | Grapes |



## LET US LISTEN




**Listen to the audio and answer the following.**

1. Why did Jacklin invite Shabeena to her house?
   a. To study  b. to play
2. Did Shabeena go to Jacklin's house?
   a. Yes  b. No
3. Who has the big bus?
   a. Jacklin  b. Shabeena
4. Who has the robot?
   a. Jacklin  b. Shabeena
5. Who said "Mm.. interesting"
   a. Jacklin  b. Shabeena

**Note to the teacher:**
Scan the QR code to listen to the audio. Let the children listen to the audio and answer the questions.

